T.K.S. Krishnaswamy.

உ

கடவுள்துணை.

---

# நீதிவெண்பா.

மூலமும் - உரையும்.

---

திருத்தமான  பதிப்பு.

IMS0281

அமரம்பேடு

இரங்கசாமிமுதலியார் அண்டு சன்ஸ்

அவர்களாற்றமது

பூமகள்விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை.

விலை] 1916. [அணா 2.

நெ. 24, தாண்டவராயப்பிள்ளை வீதி

உ

சிவமயம்.

# நீதிவெண்பா.

## மூலமும்-உரையும்.

—ooꕥoo—

### காப்பு-வெண்பா.

மூதுணர்ந்தோரோதுசில மூதுரையைப்பேதையேன்
நீதிவெண்பாவாக நிகழ்த்தினே-னாதிபரன்
வாமாங் கருணை வணியுதிரம் பூத்தமுதற்
கோமான் பெருங்கருணைக் கொண்டு.

(இதன் பொருள்.)

பெரியோர்கள் சொல்லி யிருக்கின்ற நீதிவாக்கியங்களில் சிலவற்றை அறிவிலலாதவனுகிய யானும் பரமசிவனுடைய இடதுபாகத்திலிருக்கும் பராசத்தியீன்றருளிய விநாயகமூர்த்தியின் கிருபையினுலே வெண்பாவாகச் சொன்னேன்-எ-று.

### நூல்.

தாமரைப் பொன் முத்து சவரங்கோ ரோசனைபால
பூமருதேன் பட்டு புனுகுசவ்வா-தாமழன்மற்
றெங்கே யிருந்தாலு மென்னாரே நல்லோர்க
ளெங்கே பிறந்தாலு மென்.

(இ-ள்.) தாமரை, பொன், முத்து, சாமரை, கோரோசனம், பால, தேன், பட்டு, புனுகு, சவ்வாது, நெருப்பு இவைகள் இழிவான இடங்களில் உண்டாகின்றவைகளா யிருந்தாலும் யாவராலும் சிறப்பாக

ஏற்றுக்கொள்ளப்படுகின்றன, அதுபோலப்பெரியோர்கள் எந்தக்குலத்திலே பிறந்தாலும் யாவராலும் மேன்மையாக ஏற்றுக்கொள்ளப் படுவார்கள்-எ-று. ௧

அரிமந்திரம் புகுந்தா லானை மருப்பும்
பெருகொளிசேர் முத்தும் பெறலாம் நரிநுழையில
வாலுஞ்சிறிய மயிரெலும்புங் கத்தபத்தின்
தோலுமலலால வேறுமுண்டோ சொல்.

(இ-ள்) சிங்கமிருக்குங் குகையிற்போனால யானைத்தந்தங்களையும் முத்துக்களையும் அடையலாம் நரியிருக்குமிடத்திற் போனால கழுதைத்தோலையும், மயிரையும், எலும்பையும் அடையலாம அவைபோல பெரியோர்க ளிருக்குமிடத்திற் போனால மேலான பொருளையடையலாம் மூடர்களிடத்திற்போனால இழிவான பொருளையடையலாம்-எ-று. ௨

அறிவன் பகையேனு மன்புசேர் நட்பாஞ்
சிறுவன் பகையாஞ் செறிந்த-வறிவுடைய
வென்றிவன் சான்றுன் வேதியனைக் காத்தான் முன்
கொன்றதொரு வேந்தைக் குரங்கு.

(இ-ள்.) அறிவுள்ளவனைப் பகைத்தால நட்பேபாராட்டுவான், மூடனைச்சினேகித்தால விரோதமேபாராட்டுவன், அறிவுடையவேடன் ஒரு பிராமணனைக் காத்தான் ஒரு குரங்கு ஒரு அரசனைக் கொன்றது.

ஒரு அரசன் ஒருபிராமணனுக்கு ஒருமாணிக்கங் கொடுத்து நீபோகிறவழியில திருடர்க ளிருப்பார்களாகையால அதை விழுங்கி உன் ஊரிலேபோய்க் கக்கியெடுத்துக் கொள்ளென்று சொன்னான் அதையறிந்த ஒருவேடன் பிராமணனைத் தொடர்ந்து போ

ய்க்காட்டில் விளைத்துக்கொண்டு உன் வயிற்றிலிருக்கிற மாணிக்கத்தைத் தாவென்று பயமுறுத்தினன். அந்தப்பிராமணன் என்வயற்றிலில்லை உன்வயிற்றிலே தானிருக்கிறதென்று சொல்ல இப்படி இவர்களிருவரும் வழக்கிட்டுக் கொண்டிருக்கும்போது வந்த சில திருடர்களவ்விருவர் வயிற்றையும் கீறிப்பார்க்க எத னிக்கையில பிராமணனிறக்கும்படி நேரிட்டதென்றுவேடன் மனதிரங்கி நாங்களிருவரும் விளையாட்டாகப் பேசினேமே யல்லாமல் நிஜமல்ல உங்களுக்குச் சந்தேகந்தோன்றுமாகில் முன்னே என்வயிற்றைச் சோதித்து மாணிக்கமிருந்தால் பின்பு பிராமணன் வயிற்றையும் கீறிப்பாருங்களென்று சொல்ல அப்படியே சோதித்து இல்லாமையினலே பிராமணனைவிட்டு விட்டார்கள்.

ஒருராஜன் தான் வளர்தத குரங்கின் கையில் வாளைக்கொடுத்து இவ்விடத்தில் ஆரையும வரவொட்டாமல் காத்திருவென்று சொலலி நித்திரைபோகையில் அரசன்மேல ஒரு ஈ வந்தேறக்கண்டு குரங்கு அதை வெட்ட அந்த இராசன் இரண்டு துண்டமாயிறந்துபோனன்-எ-று. ௩

மென்மதுர் வாக்கால விரும்புஞ் சகங்கடின
வன்மொழியி னலிகழு மண்ணுலகு-நன்மொழியே
ரோதுகுயி லேதங் குதவியது கத்தபந்தா
னேதபரா தஞ்செய்த தின்று.

(இ-ள்.) இனிமையான வசனம் வசனித்தால இவ்வுலகத்தார் விருப்பமுற்றுப் புகழ்வார்கள் வன்மையான வசனம் வசனித்தால வெறுப்புற் றிகழ்வார்கள் குயில கூவினல் யாவரும் விருப்பமாய்க் கேட்பார்குயில உதவிசெய்தது மிலலை வெறுப்புறும்படி கழுதை குற்றஞ்செய்ததும் இலலை-எ-று. ச

பகைசேரு மெண்ணான்கு பற்கொண்டே நன்கு
வகைசேர் சுவையருந்து-மாபோல்
பகைவரிட மெய்யன்பு பாவித் தவரால்
சுகமுறுத னல்லோர் தொழில்.

(இ-ள்.) பகையாகிய முப்பத்திரண்டு பற்களைக்கொண்டு நாவானது பலசுவைகளையுண்டறியும், அது போல நல்லோர்கள் பகைவரிடத்தில் அன்புள்ளதாக வேபாவித்து அவர்களால சுகத்தையடைவார்கள். ௫

காந்த னில்லாத கனங்குழலாள் பொற்பவமாஞ்
சாந்தகுண மில்லார் தவமவமா-மேந்திழையீ
ரன்னையிலலாப் பிள்ளை யிருப்ப தவமவமே
துன்னெறியில் லாருண் சுவை.

(இ-ள்) கணவனில்லாத மனைவியினழகும் சாந்த குணமில்லாதார் தவமும், தாயிலலாத பிள்ளைகளிருப்பதும், பற்களில்லாதார உண்ணும் உணவின் சுவையும் வீணாகும்-எ-று. ௬

வருத்த வளைவேயரசர் மாமுடியின் மேலாம்
வருத்த வளையாத மூங்கில்-தரித்திரமாய்
வேழமபார் கைப்புகுந்து மேதினி யெலலாந் திரிந்து
தாழுமவர் தம்மடிக்கீழ் தான்:

(இ-ள்) இளமையில் வருத்தமுற்று வளைக்கப்பட்ட மூங்கில் மன்னவர்களுடைய முடிக்கு மேலாக விருக்கும் அப்படி வளைக்கப்படாத மூங்கில் கழைக்கூத்தர் காலின் கீழாகவிருக்கும் அதுபோல இளமையில வருத்தமுற்றுக் கல்வி கற்றுணர்ந்தவர்கள் யாவருக்கும் மேலாகவிருப்பார்கள் அப்படிக்கலலாதார் தரித்திரராய்த் தாழ்வடைவார்கள்-எ-று. ௭

நொய்தாந் திரணத்தி னொய்தாகும் வெண்பஞ்சு
நொய்தா மிரப்போ னுவலுங்கால் - நொய்யசிறு
பஞ்சுதனி னெய்யானைப் பற்றாதோ சாற்றனுக
வஞ்சுமவன் கேட்ப தறிந்து.

(இ-ள்) அற்பமாகிய துரும்பைப் பார்க்கிலும் பஞ்சு அற்பமாயிருக்கும். இரப்போன் அந்தப்பஞ்சிலும் அற்பமாவான் அப்படியானால். அந்தப் பஞ்சையடித்துக்கொண்டு போகின்ற காற்று அவனை அடித்துக்கொண்டுபோகப் பயப்படும் எ-று. அ

ஒருபோது யோகியே யொண்டளிர்க் கைமாதே
யிருபோது போகியே யென்ப திரிபோது
ரோகியே நான்கு போதுண்பா னுடல்விட்டுப்
போகியே யென்று புகல்.

(இ-ள்) ஒருபொழுது உண்பவன் யோகி, இருபொழுது உண்பவன் போகி, மூன்றுபொழுது உண்பவன் ரோகி, நான்குபொழுது உண்பவன் இறந்தவனேயாவான் எ-று. கூ

கண்ணிரண்டே யாவர்க்குங் கற்றோர்க்கு மூன்றுவி
ளெண்ணும்விழி யேழாகு மீவோர்க்கு - நண்ணும் [ழி
அனந்தந் தவத்தா லருண்ஞானம் பெற்றோர்க்
கனந்தம் விழியென் றறி.

(இ-ள்.) யாவருக்கும் இரண்டு கண்களேயாகிலுங் கற்றவர்களுக்குக் கல்வியாகிய கண்ணுடன் மூன்று கண்களாம் கொடுக்குங் கைவிரல் நகக் கண்களோடு கொடையாளிகளுக்கு ஏழு கண்களாம் தவத்தால் எல்லாம் பொருளையு மறியுந்தன்மை யிருக்கின்றமையால் ஞானிகட்கு அனந்தங்கண்களாம் நக்க

ண்களை மற்றக்கண்களோடு சேர்த்துக்கூறியது ஈகை
யின் பெருமை தோன்றவென்க. ௨0

உற்ற பெருஞ்சுற்ற மொழியா மனைவியுடன்
பற்றி மிகவாழ்க பசுவின்பால் பற்றி
நதிகடத்த லன்றியே நாயின்வால் பற்றி
நதிகடத்த லுண்டோ நவில.

(இ-ள்.) பந்துக்களைவிட்டு நீங்காமல் மனைவியுடன் இல்வாழ்க்கையில் வாழ்ந்தால் கதிபெறலாம், பரத்தையருடன் கூடிவாழ்ந்தால் கதியடையக்கூடாது அதெப்படியெனில் பசுவின்வாலைப் பிடித்துக்கொண்டு ஆற்றிலிறங்கினால் ஏறலாமேயன்றி நாயின்வாலைப் பிடித்துக்கொண்டு கரையேறக்கூடாது அதுபோல எ-று கக

ஆசைக் கடியா னகிலலோ கத்தினுக்கு
மாசற்ற நல்லடியா னவானே - யாசை
தனை யடிமை கொண்டவனே தப்பா துலகந்
தனை யடிமை கொண்டவனே தான.

(இ-ள்.) ஐம்புலநுகர்ச்சியில் இச்சையுள்ளவனுலகத்தாருக்கு அடிமையாவன், அவ்விச்சை யில்லாதவன் உலகத்தாரையெலாந் தனக்கடிமை யாக்கிக் கொள்ளுவன் எ-று. க௨

ஆனந்தணாமகளி ரன்பாங் குழந்தை வதை
மானந்தரும்பிசி வார்த்தையிவை - மேனிரையே
கூறவரு பாவங் குறையா தொவ்வொன்றுக்கு
நூறதிக மென்றே நவல்.

(இ-ள்.) ஒருபிராமணனைக் கொன்றால் நூறுபசுக்களைக்கொன்றபாவமாம் ஒரு ஸ்திரீயைக்கொன்றால் நூறுபிராமணனைக் கொன்ற பாவமாம் ஒரு குழந்

தையைக்கொன்றால் நூறுஸ்திரீகளைக் கொன்றபாவ மாம், ஒரு பொய்சொன்னால் நூறு குழந்தைகளைக் கொன்றபாவமாம் எ-று. ௪௩.

பெற்றமையு மென்னும் பெரியோரும்பெற்றபொருள்
மற்றமையு மென்றே மகிழ்வேந்து - முற்றியநன்
மானமில்லா வில்லாளு மானமுறு வேசையரு
மீன முறுவா ரிவர்

(இ-ள்) கிடைத்தபொருள் போதுமென்று மகிழ்ச்சியடையாத பெரியோர்களும் கிடைத்தபொருள் போதுமென்று மகிழ்ச்சியடைகின்ற வேந்தனும் நாணமில்லாத மனைவியும் நாணமுள்ள விலைமாதரும் குறைவையடைவார்கள் எ-று. ௪௪

கற்றோர் கனமறிவர் கற்றோரா கற்றறியா
மற்றோ ரறியார் வருத்தமுறப் - பெற்றறியா
வந்தி பரிவாய மகவைப் பெருந்துயரம்
நொந்தறிகு வாளோ நுவல்.

(இ-ள்.) கல்வி கற்றவர்களது பெருமையை அவர்போல் கல்விகற்றவர்கள் அறிவார்களேயன்றிக் கல்லாத மூடர்களறியார்கள், அது எப்படியெனில், பிள்ளையைப்பெறுகிற வருத்தம் பெற்றவளறிவாளேயன்றிப் பெறாத மலடியறியாள் அதுபோல எ-று ௪௫

செய்யிலொரு கருமந் தேர்ந்து புரிவதன்றிச்
செய்யின் மனத்தாபஞ் சேருமே - செய்யவொரு
நற்குடியைக் காத்த நகுலனைமுன் கொன்றமறைப்
பொற்கொடியைச் சேர்துயரம் போல்

(இ-ள்) ஒரு காரியத்தை ஆலோசியாமல் செய்கின்றவர்களுக்குத் தான்வளர்த்த கீரியைக்கொன்ற பி

ராமணஸ்திரீக்குத் துயரம் நேரிட்டதுபோல மனவருத்தம்நேரிடும்.

வரலாறு பிராமணன் ஸ்திரீ புத்திர வாஞ்சையால் ஒருகீரிப்பிள்ளையை வளர்க்கும்போது ஒருகுழந்தை பிறந்து வளர்வதைத்தொட்டில் வளர்த்திவிட்டு ஸ்நானஞ்செய்யப்போனாள் அப்பொழுது தொட்டிலின்கயிற்றுவழியாக இறங்கிவருகின்றபாம்பைக் கீரிப்பிள்ளை கண்டு துண்டு துண்டாகக் கடித்து விட்டுப் பிராமணஸ்திரீக்குச் சொல்லப்போகையில் உகரந் தோய்ந்தவாயுடன் வருகிறகீரியை அவள்கண்டு குழந்தையைக் கடித்துப்போட்டு வருவதாகநினைத்து அந்தக்கீரியைக்கொன்றுவிட்டு வீட்டில்வந்துதொட்டில் தூங்குகிற குழந்தையையும் பாம்புதுண்டத்தையும்பார்த்து ஓஓ நாம் ஆலோசியாமல் கீரியைக் கொன்றோமேயென்று மிகுந்ததுயரத்துடன் குழந்தையும் தானுமாய் கிணற்றில் விழுந்திறந்தாள் பின்புவந்த அவள்புருஷனும் அப்படியேஇறந்தான் எ-று. கசு

நாவி னுனியி னயமிருக்கிற் பூமாது
நாவினிய நல்லோரு நண்ணுவார் - நாவினுனி
யாங்கடின மாகி லத்திருவுஞ் சேராள்முன
னங்கே வருமரண மாம்.

(இ-ள்.) இன்சொலுடையானிடத்துப் பூமகளும் நல்லவர்களும் இருப்பார்கள் வன்சொலுடையா னிடத்து அப்பூமகளும் நல்லோர்களுஞ் சேரார்கள் அவனுக்குமரணமும் நேரிடும் எ-று. கஎ

ஈய்க்கு விடந்தலையி லெய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே - நாக்கரிய
பைக்கண ரவுக்குமிடம பல்லளவே துர்ச்சனருக்
கங்கமுழுதும் விடமே யாம்

(இ-ள்.) ஈய்க்குவிஷம்தலையிலும் தேளுக்கு விஷ ம்கொடுக்கிலும்பாம்புக்குவிஷம் பல்லிலும் இருக்கும் துர்ச்சனருக்குஉடல்முழுதும் விஷம்இருக்கும் எ-று.

துர்ச்சனரும் பாம்புந் தலையொக் கினும்பாம்பு
துர்ச்சனரை யொக்குமோ தோகையூர்-துறசனர்தா
மெந்த விதத்தாலு மினங்காரே பாம்புமணி
மந்திரத்தா லாமே வசம்.

(இ-ள்) துர்ச்சனரும் பாம்பும் செய்கையில்ஒத்தி ருந்தாலும் பாம்பு துர்ச்சனரை யொவ்வாது எனெ னில் துர்ச்சனர் எந்த விதத்தாலும் வசப்படார்கள் பாம்புமணிமந்திரங்களால் வசமாம் எ-று. கக

கொம்புளதனற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே-வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணிற் றெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி.

(இ-ள்.) கொம்புள்ள மிருகங்களுக்கு ஐந்து முழ தூரமும் குதிரைக்குப் பத்துமுழதூரமும் யானைக்கு ஆயிரமுழதூரமும் விலகிப்போகவேண்டும் துர்ச்சன ர்களைக் கண்டாலவர்கள் கண்களுக்குத் தெரியாததூ ரத்திலே விலகிப்போவதே நல்ல நெறியாம். உ0

அவ்விய நெஞ்சத் தறிவிலாத் துர்ச்சனரைச்
செவ்விய ராக்குஞ் செயலுண்டோ-திவ்வியநற்
கந்தம பலவுங் கலந்தாலு முள்ளியது
கந்தங் கெடுமோ கரை.

(இ-ள்) பொறாமையும் மூடத்தனமு முள்ள துர் ச்சனரை யோக்கியராக்கும் வகையுண்டோ வெனி

ல் இல்லை அது எப்படியெனில் பலவகையாகிய திவ்வியவாசனைப் பண்டங்களை கலந்தாலும் வெண்காயத்தினதுநாற்றமாருது அதுபோல எ-று. உக

துன்னு மிருமலுந் தூர்ச்சனரு மொக்குமோ
மன்னுமிருமனேய் மாறுதிங்-கென்னே
கடுவுங் கடுநேர் கடுமொழியுங் கண்டால்
கடுகவச மாகை யால்.

(இ-ள்.) இருமனேயும் தூர்ச்சனருமொப்பல்ல அதெப்படியெனில் இருமனேய் கடுக்காயாய் நீங்கும் தூர்ச்சனர் கடினவசனத்தோடு கண்டித்தால் வசமவார்க ளாகையால் எ-று. உஉ

செங்கமலப் போதாந்தசெல்வி போலும் மதனந்
தங்குமாழி சந்தனம் போலும்-பங்கிபெரி
கத்திரியைப் போலுமினக் காரிகையீர் வஞ்சமனக்
குத்திரர்பால் மூன்று குணம.

(இ-ள்.) வஞ்சகருக்கு முகம் தாமரைமலர்போலப்பொலிவாயிருக்கும் வசனம் சந்தனம் போலக்குளிர்ச்சியாயிருக்கும் மனம்மயிர் கத்தரிக்கிறகத்திரியைப் போலக் கொடிதாயிருக்கும் எ-று. உங

நீசனே நீச நினையுங்காற் சொற்றவரும்
நீசனே நீச னவனேயே-நீசப்
புலையனு மென்றுரைக்கும் புல்லியனேமேலாம்
புலையனு மென்றே புகல்.

(இ-ள்) நீசனேநீசன் சொன்னசொற்றவறுகிறவனேயிழிவானநீசன் ஆகையால் நீசனையிழிவான புலையனென்றுசொல்லுகிறவனே இழிவானபுலையன்.

ஞான மாசாரம் நயவா ரிடைப்புகழு
மேனை நால் வேத மிருக்குநெறி - தான்மொழியிற்
பாவநிறை சண்டாளர் பாண்டத்துக் கங்கைநீர்
மேவுநெறி யென்றே விடு.

(இ-ள்) ஞானமும் ஆசாரமும் இல்லாதவர்களிடத்து நான்குவேதமு மிருப்பது சண்டாளர் பாத்திரத்திலே கங்கைநீரிருப்பதுபோலாம் எ-று. உடு

குணநன் குணராக் கொடியோ ரிடத்துக்
குணநன் குடையார் குறுகார் - குணமுடைமை
நணுகுச் சமண நகரத்திற் றாசோலிக்கும்
வணுணுக் குண்டோ வழக்கு.

(இ-ள்.) நல்லகுணமில்லாத துர்ச்சனரிடத்து நற்குணமுடைய சற்சனர்கள் போகார்கள் (அது எப்படியெனில்) நிருவாணிகளாகிய சமணர்களிருக்கும் நகரத்தில் வண்ணான் போகவேண்டிய காரியமில்லை அதுபோல் எ-று. உசா

ஆனைமருப்பு மருக்கவரி மான்மயிருங்
கானவரி புதிருங் கற்றோரு - மானே
பிறந்தவிடத் தன்றிப் பெறிதொரு - தேசத்தே
சிறந்தவிடத் தன்றே சிறப்பு.

(இ-ள்.) ஆனைத்தந்தமும் கவரிமான் மயிரும் புலிநகமும் கல்விகற்றவர்களும் பிறந்தவிடத்தில்லாமல்வேறொரு தேசத்திற் போனாலும் நல்லசார்பை யடைந்தாலே பெருமை கிடைக்கும் எ-று உஎ

தலைமயிருங் கூருகிரும் வெண்பல்லுந் தந்தம்
நிலையுடைமை யானவரு நிற்கு - நிலைதவறு

தானத்திற் பூச்சியமே சாருநிலை தவறுந்
தானத்திற் பூச்சியமே தான்.

(இ-ள்) தலைமயிரும் நகங்களும் பற்களும் மானமு டையவர்களும் இறக்கும் இடத்திலிருந்தால் மேன் மையேயல்லாமல் இருக்குமிடத்தைவிட்டால் மேன் மையில்லை எ-று. உ௮

வென்றிவரி யுகிரும் வெண்கவரி மானமயிருந்
தன்றுமக யானைச் சுடர்மருப்பு - நின்றநிலை
வேறுபடி னுஞ்சிறப்பா மெய்ஞ்ஞானி நின்றநிலை
வேறுபடி னுஞ்சிறப்பா மே.

(இ-ள்) புலிநகம் கவரிமான்மயிர் யானைத் தந்தம் இவையெல்லாம் இருக்கும் இடத்தைவிட்டு நீங்கினு லும் சிறப்பையடையும் அதுபோல மெய்ஞ்ஞானிக ள் தங்களிருப்பிடத்தைவிட்டு நீங்கினாலும் சிறப்பை யடை வார்கள் எ-று உ௯

அன்னை தயையு மடியாள் பணியுமலர்ப்
பொன்னி னழகும் புவிப்பொறுமை - வன்னமுலை
வேசி துயிலும் விரல்மந் திரிமதியும்
பேசிலிவை யுடையாள் பெண்.

(இ-ள்.) அன்பில் தாயைப்போலும், பணிவிடை செய்வதில் அடியாளைப்போலும், அழகில் பூமகளைப் போலும் பொறுமையில் பூமியைப் போலும் போக த்தில் வேசியைப்போலும் புத்தியில் மந்திரியைப் போலும் இருப்பவளே நல்லமனைவியாவள் எ-று.

பெண்ணொருத்தி பேசில் பெரும்பூமி தானதிரும், பெண்ணிருவர் பேசில் விழும்வான்மீன்சுவ,பெண் தி

வர் பேசில்லைசுவரும் பேதையே பெண்பலர் தாம்,
பேசிலுல கென்னமோ பின்.

(இ-ள்.) ஒருஸ்திரீ பேசினால்பூமியதிரும் இரண்டு ஸ்திரீகள் பேசினால் நட்சத்திரங்களுதிரும் மூன்று ஸ்திரீகள்பேசினால் சமுத்திரசலம்வற்றிப்போம் பல ஸ்திரீகள்பேசினால் உலகம் என்னபாடு படுமோ தெரியாது எ-று. ௯௧

என்னே கிருதத்தில் ரேணுகையே கூற்றுவனாந்
தன்னேர் திரேதத்திற் சானகியே - பின்யுகத்திற்
கூடுந் துரோபதையே கூற்றாங் கலியுகத்தில்
வீடுதொறுங் கூற்றுவனு மே.

(இ-ள்.) கிருதயுகத்தில் ரேணுகை நமன்போலிருந்தாள் திரேதாயுகத்தில் சீதை நமன் போலிருந்தாள் துவாபரயுகத்தில் துரோபதை நமன்போ லிருந்தாள் கலியுகத்தில் வீடுகள்தோறு மிருக்கு மாதர்களெல்லாரும் அனந்தம் நமன்போ லிருக் கிறார்கள் எ-று. ௯௨

கற்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்
கற்பூர மாமோ கடலுப்பு - பொற்பூரும்
புண்ணியரைப் போலவிருந்தாலும் புல்லியர்தம்
புண்ணியரா வாரோ புகல்.

(இ-ள்) கற்பூரம்போலக் கடலுப்பு வெள்ளையாகவிருந்தாலும கற்பூரமாகாது அதுபோலப் பாவிகள் உருவத்தில் புண்ணியரைப்போ லிருந்தாலும் புண்ணியராகார்கள் எ-று ௯௩

சிலமில்லா தேனேனுஞ்செப்பிடினுந் தானந்தக்
காலமிட மறிந்து கட்டுரைத்தே-யேலவே

செப்புமவ னுந்தான் சிந்தைநோ காதகன்று
தப்புமவ னுத்தமனே தான்

(இ-ள்) நல்லொழுக்க மில்லாதவன் என்ன சொன்னாலும் அவன் மனந்நோகாமல் காலமுமிடமுமறிந்து பேசி நீங்கிப்போகிறவனே உத்தமன் எ-று. உச

சிற்றுணர்வோ ரென்றுஞ் சிலுசிலுப்ப ரான்றமைந்த
முற்றுணர்வோ ரென்றுமொழியாரே வெற்றிபெறும்
வெண்கலத்தி னோசை மிகுமே விரிபசும்பொ
னெண்கலத்த லுண்டோ வொலி.

(இ-ள்) சிற்றறிவுடையவர்கள் படபடத்தே பேசுவார்கள் பேரறிவுடையவர்கள் அப்படிப் பேசார்கள் அதெப்படி யெனில் வெண்கலப்பாத்திரத்தில் ஓசையுண்டாம் பொன்பாத்திரத்தில் ஓசை யுண்டாகாது அதுபோல் எ-று. உரு

உள்ளபொழு தேது முவந்தளிப்ப தல்லாம
லெள்ளளவு மீய விசையுமோ - தெள்ளுதமிழ்ச்
சிரளித்தோ னுண்டநாட் சேர்மேகத்துக் கருந்த
நீரளித்த தோமுன்னீர் நின்று.

(இ-ள்) பொருளுள்ள காலத்தில் அடுத்தவர்களுக்கு எவ்வளவாகிலுங் கொடுக்கக்கூடுமேயல்லாமல்பொருளில்லாத காலத்தில் கொடுக்கக் கூடாது அதெப்படியெனில் அகத்தியமகாமுனிஉண்டு விட்டகாலத்தில் சமுத்திர மானது மேகத்துக்கு ஜலத்தைக்கொடுத்ததுண்டோ அதுபோல எ-று. உசு

பேதையரைக் கண்டால் பெரியோர் வழிவிலகி
நீதியொடு போகநெறி யன்றோ - காதுபல

மாகரத்த யானைவழி விலகல்புன் மலமுண்
சூகரத்துக் கஞ்சியோ சொல்.

(இ-ள்) மூடர்களைப் பெரியோர் கண்டால் விலகிப் போவதே நல்லநெறி அது எனெனில் மலத்தைப் புசிக்கும் பன்றியைக்கண்டால் யானை விலகிப் போவது அதற்குப் பயந்தன்று எ-று. ௩௭

மந்திரமுந் தேவு மருந்துங் குருவருளுந்
தந்திரமு ஞானந் தருமுறையும் - யந்திரமு
மெய்யென்னில் மெய்யாய் விளங்குமே மேதினியில்
பொய்யென்னிலே பொய்யாகிப் போம்

(இ-ள்) மந்திரம் தெய்வம் மருந்து ஆசாரிய ரருளிச்செய்யும் ஆகமசாஸ்திரங்கள் அவற்றுள் சொல்லுகின்ற ஞானநெறி சிதம்பரசக்கர முதலாகிய சக்கரங்கள் இவை யெல்லாம் மெய்யென்று நம்புகிறவர்களுக்கு மெய்யாகவிளக்கும் பொய்யென்று நினைப்பவர்களுக்குப் பொய்யாய்விடும் எ-று. ௩௮

ஈசனெதிர் நின்றாலு மீசனருள் பெற்றுயர்ந்த
நேசரெதிர் நிற்ப தரிதாமே - தேசுவளர்
செங்கதிர்முன் னின்றாலுஞ் செங்கதிரின் வன்கிரணந்
தங்குமண னிற்கரிதே தான்.

(இ-ள்) பரமேசுவரரைப் பகைத்தாலும் பகைக்கலாம் அவரருள் பெற்ற அடியார்களைப்பகைக்கலாகாது அதெப்படியெனில் சூரியனுக்கெதிரில் நின்றாலும் நிற்கலாம் கிரணந்தோய்ந்து வெப்பமுற்ற மணலில் நிற்கக்கூடாது அதுபோல எ-று. ௩௯

முற்று மிறைசெயலே முற்றிடினுந் தன்னருளைப்
பெற்றவர்தம் பாலே பெரிதாகும் - பற்றுபெறுந்

தாபத் திடத்தே தழன்றிடினு நற்சோதி
தீபத் திடத்தே சிறப்பு.

(இ-ள்) பரமேசுவரருடைய செயலெவ்விடத்திலும் பொருந்தி யிருப்பினும் அவரது திருவருளைப்பெற்ற தொண்டர்களிடத்தே மிகுதியாய் விளங்கும் அதெப்படியெனில் சோதியானது காட்டுத்தீயினிடத்துமிகுதியாக விளங்கினாலும் சிறப்பில்லை தீபத்தினிடத்திலே சிறிதாக விளங்கினாலும் சிறப்புற்றிருக்கும் அதுபோல எ-று. ௨௰

கன்னியரைப் பெண்ணுங் கழிந்தோரைமற்றயலார்
பன்னியரை மாயப் பரத்தையரை - முன்னரிய
சாதியரை நல்லோர் தழுவநினை யார்நரகத்
தீதுவரு மென்றே தெரிந்து.

(இ-ள்) கன்னியர்கள் கைம்பெண்கள் பிறர்மனைவியர்கள் வேசிகள் தாசிகள் என்னும் இவர்களைப்புணர்ந்தால் நரகவேதனை சம்பவிக்குமென்று நல்லோர்கள் புணர மனதிலும் நினையார்கள் எ-று. ௨௧

தன்னை யளித்தா டமையன் மனைகுருவின்
பன்னி யரசன் பயிறேவி - தன்மனையைப்
பெற்று ளிவரைவர் பேசி லெவருக்கும்
நற்றாய ரென்றே நவில்.

(இ-ள்) தன்னைப்பெற்றவள் தமையன் மனைவிகுருபத்தினி அரசன்மனைவி தன் மனைவியைப் பெற்றவள் என்னும் இவ்வைவர்களுந் தாய்மார்களாம். ௨௨

வாவி யுறைநீரும் வடநிழலும் பாவகமும்
ஏவனைய கண்ணா ரிளமுலையு - மோவியமே

மென்சித காலத்து வெம்மைதரும் வெம்மைதனி
லின்பாருஞ் சீதள மாமே

(இ-ள்) தடாகத்து நீரும ஆலமரத்து நிழலும் பாவுகல்போட்டவீடும் ஸ்திரீகளுடைய ஸ்தனங்களும் சீதளகாலத்திலே வெப்பமாயிருக்கும் வேனிற்காலத்திலே குளிர்ச்சியாயிருக்கும் எ-று. சஙு

உற்றதொழில் செய்வோர்க் குறுபஞ்ச மில்லையாம்
பற்றுசெபத் தோர்க்கில்லை பாவங்கள் - முற்று
பற்றுசெபக் தோர்க்கில்லை யருகலகந் துஞ்சாப்
பவனத்தோர்க் கில்லை பவம்.

(இ-ள்) தத்தமக்குரிய தொழில் செய்கிறவர்களுக்கு வறுமையில்லை, காலந்தப்பாமல் செபஞ்செய்கிறவர்களுக்குப் பாவமில்லை, மவுனமாயிருப்பவர்களுக்குச் சண்டையில்லை, தேவர்களுக்குப் பயமில்லை எ-று.

ஆபத்து வந்தா லரும்பொருடான் வேண்டுமே
ஆப தேன் பூமா தருகிருந்தா - லாபத்து
வந்தா லவளு மருவாம லெப்பொருளு
மந்தோ வுடன்போ மறி

(இ-ள்) ஆபத்துவந்தால் அதை நீக்கிக்கொள்ளும் பொருட்டுத் திரவியம்வேண்டும் திருமகள் கடாட்சமிருந்தால் ஆபத்து ஏன்வருமென்றால் ஆபத்துவரும்போது இலட்சுமி கடாட்சம் போய்விடும் அது போய்விட்டால் பொருள்களும் போய்விடும் எ-று.

இன்னறரும் பொருளை யீட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே - பன்ன
தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பா
லிழத்தலுந் துன்பமே யாம்.

(இ-ள்.) பொருளைச் சம்பாதித்தாலுந் துன்பம் பின்பு அதைப் பாதுகாத்தலுந் துன்பம் அதைச் செலவிடுதலுந் துன்பம் அதை யிழந்தவிடுதலுந் துன்பம்.

தானே புரிவினையாற் சாரு மிருபயனுந்
தானே யனுபவித்தாற் றப்பாது - தானூறு
கோடிகற்பஞ் சென்றாலுங் கோதையீர் செய்தவினை
யாடிநிற்கு மென்றோர் நவந்து.

(இ-ள்.) ஒருவன் செய்த நல்வினை தீவினையால் வருகிற பாவபுண்ணியங்கள் அனேகங் கற்ப காலங்கள் சென்றாலும் அவன் அனுபவிக்கும்படியே வந்து சேரும் எ-று. சஎ

தூய வறிவினர்முன் சூழ்துன்ப மில்லையாங்
காயும் விடங்கருடற் கில்லையா - மாயுங்கால்
பன்முரஞ்சேர் தீமுன் பயின்சீத மில்லையாந்
துன்முகருக் குண்டோ சுகம்.

(இ-ள்.) கருடனிடத்து விஷஞ்சேராது அதுபோல் அறிவுள்ளவனிடத்துத் துன்பஞ்சேராது தீயினிடத்துக் குளிர்ச்சிசேராது அதுபோலத் துர்ச்சனிடத்துச் சுகஞ்சேராது எ-று. சஅ

தென்புலத்தார் தெய்வம்விருந்தொக்க லனுயிவரோ
டின்புறத்தா னுன்ன லினிதாமே - அன்புறவே
தக்கவரை யின்றித் தனித்துண்ண வான்கவர்மீன்
றொக்க யின்றலென்றே குறி

(இ-ள்.) பிதுர்க்கள் தெய்வங்கள் விருந்தினர்கள் சுற்றத்தார் என்னு மிவர்களோடு தானுமுண்ணுதலின்பமாம் அப்படியின்றித் தான்மாத்திரந் தனித்து

ண்ணல் கொக்கானது குளக்கரையில் தனித்திருந்து மீனைத்தின்பதை யொக்கும் எ-று. சஉ

இந்திரவி னீள்கிரண மெங்கு நிறைந்தாலு
மிந்திரவி காந்தத் திலகுமே - யிந்திரவி
நேத்திரத்தோ னெங்கு நிறைந்தாலு நிந்தனருள்
நேத்திரநரோர் பாலே நிறைவு

(இ-ள்.) சந்திரசூரியருடைய கிரணங்கள் எங்கும் நிறைவாயிருந்தாலும் சந்திரகாந்தக் கல்லிலும் சூரிய காந்தக் கல்லினுமே அதிக பிரகாசமாயிருக்கும் அது போல் பரமசிவன் எங்கும் நிறைந்தாலும மெய்ஞ் ஞானிகளிடத்தே பரிபூரணமாயிருப்பார எ-று. ௩௰

தாமோ தரன்முதலோர் சாதகநூல் சாற்றுவதும்
பூமேலோர் பொன்றுவதுங் கண்டோமே - நாமுடலை
நேசிபப தென்னே நிலையாகுஞ் சங்கரனைப்
பூசிப்ப தென்றே புகல்.

(இ-ள்) திருமால் முதலிய தேவர்கள் இறப்பதை நூல்களிற் சொல்வதையும் இவ்வுலகத்தார் இறத்த லையும் நாமறிந்தோம் ஆகையால் மனமே யாக்கை நிலையானதென்று விரும்புவது எப்படி பரமசிவனைப் பூசிப்பதே நிலையாகும் எ-று. ௩க

அரசி னிலையநுனி னக்கிரத்தி னின்று
விரைய விழுதுளியே போலும் - புரையுடைய
லாக்கைவிடா முன்ன மரன்பாதம் பூசிக்க
நோக்கனன் றென்றே நுவல்.

(இ-ள்) அரசிலை நுனியினின்றும் விழுகிற நீர்த் துளிபோல் அடிக்கடி இறந்துபிறக்குந் தன்மையையு

டைய இந்தச் சரீரத்தைவிட்டு உயிர்நீங்குவதற்குமு ன்னே பரமசிவனை பூசிக்க நினைப்பது நன்மையாம்.

சத்தியத்தை வெல்லாத சத்தியந்தானீள்பொறையை
மெத்தியே கோபமது வெல்லாது - பத்திமிகு
புண்ணியத்தைப் பாவமது வெல்லாது போரரக்கர்
கண்ணனைத்தான் வெல்லுவரோ காண்.

(இ-ள்) மெய்யைப் பொய்வெல்லாது பொறுமை யைக் கோபம்வெல்லாது புண்ணியத்தைப் பாவம் வெல்லாது, அதெப்படியெனில் திருமாலை அசுரர்கள் வெல்லுவார்களோ வெல்லார்கள் அதுபோல எ-று.

பொற்பறிவில் லாதபல புத்திரரைப் பெற்றதிலோர்
நற்புதல்வனைப்பெறுத நன்றாமே - பொற்கொடியே
பன்றி பலகுட்டி பயந்ததினு லேதுபய
னென்றமையாதோ கரிக்கன் றேது.

(இ-ள்.) நல்லறிவில்லாத பல புதல்வர்களைப் பெறு வதிலும் நல்லறிவுள்ள ஒருபுதல்வனைப்பெறுதல் நன் றாகும் ஒருபன்றி பலகுட்டிகளை யீன்றதனால் என்ன பயன் யானை ஒரு கன்றை யீன்றாலும் பயனுண்டு.

அத்திமலரு மருங் காக்கை வெண்ணிறமுங்
கத்துபுனன் மீன்பதமுங் கண்டாலும் - பித்தரே
கானார் தெரியக் கடவுளருங் காண்பரோ
மானார் விழியார் மனம்.

(இ-ள்) அத்திப்பூவையும் வெள்ளைக் காக்கையும் மீன்காலையுங் கண்டாலுங் காணலாம் ஸ்திரீகளுடைய மனதைத் தேவர்களாலுங் காணககூடாது எ-று.

கான விடப்பாந்தள் கருடனையுங் கட்டுமோ
வானெரியைக் கட்டுமோ வன்கயிறு - மீனும்

பவமருளும் பாசம் வெம்பஞ் சேந்திரியம்
சிவயோகி யைப்பிணி யாவே.

(இ-ள்.) பாம்பானது கருடனைக்கட்டாது பயிரான து அக்கினியைக்கட்டாது, அதுபோல பாசமும் ஐம்பொறிகளுஞ் சிவயோகியைப் பற்றுவாம் எ-று. ௫௬

புத்தியொடு முத்திதரும் புண்ணியத்தா லன்றியே
மத்தமிகு பாவத்தால் வாழ்வாமோ - வித்துபயிர்
தாயாகி யேவளர்சகுந் தண்புனலா லல்லாது
தீயால வளருமோ செப்பு.

(இ-ள்.) ஞானத்தையும் மோட்சத்தையுந் தருகின்ற புண்ணியத்தாலல்லாமல் பாவத்தினால்வாழ்வுண்டாகாது அதெப்படியெனில் பயிரானது ஜலத்தினாலல்லாமல் தீயினால் வளராது அதுபோல எ-று. ௫௭

சிவனை சிவனே சிவனே யென்பார்பின்
சிவனு மையாளோடுந் திரிவன் - சிவனருளாற்
பெற்ற விளங்கன்றைப் பிரியாமற் பின்றொடிச்
சுற்ற பசுபோற் றொடர்ந்து.

(இ-ள்.) தான்பெற்ற கன்றின்பின் திரிகின்ற பசுவைப்போலப் பரமேசுவரர் தமது திருநாமத்தைப் பலதரஞ் செபிக்கின்ற அடியார்களை விட்டு நீங்காமல் பார்வதியாருடன் அவர்கள்பின் திரிவார் எ-று. ௫௮

தாமுங்கொடார் கொடுப்பார் தம்மையு மீயாதவகை
சேமஞ் செய்வாருஞ் சிலருண்டே - யேமநிழ
லிட்டுமலர் காய்கனிக ளீந்தருளு மாமரத்தைக்
கட்டுமுடை முள்ளெனவே காண்.

(இ-ள்.) காய் கனிகளைக் கொடுக்கின்ற மாமரத்தைச் சுற்றிக்கொண்டு பிறருக் குதவவொட்டாமல்

செப்கிற முள்ளைப்போல லோபிகள் தாங்களுங் கொ டார்கள் கொடுப்பவர்களையும் கொடுக்கவொட்டாமல் தடுப்பார்கள் எ-று. ௫௯

ஆயுமலர்த் தேன்வண் டருந்துவது போலிரப்போ
ரீயுமவர் வருந்தா தேற்றலறந் - தூயவினம்
பச்சிலை யைக்கிட மறப்பற்றி யரிப்பதுபோ
லச்ச முறவாங் கலகம்.

(இ-ள்.) மலர்கள் நலியாமல் வண்டுகள் தேனையுண் பதுபோல் இரப்பவர்கள் கொடுப்போர் மனம் வருந் தாமல் வாங்குவதே தருமம் புழுவானது பச்சிலையை அரிப்பதுபோலக் கொடுப்பவரை வருத்தப்படுத்தி வாங்குவது பாவமாம் எ-று. ௬௰

மாதா மரிக்கின் மகனுவினற் சுவைபோந்
தாதாவெனிற் கல்விதான் போமே - கோதாய்கேள்
சோதரராற் றோள்வலிபோந் தோமில் மனைவியெனி
ஆதரவும் யாவுமபோ மாங்கு.

(இ-ள்.) ஒருவனுக்குத் தாயிறந்தால் நாவினுக்கி னியசுவை போய்விடும், தகப்பனிறந்தால் கல்விபோ ய்விடும், சகோதரனிறந்தால் புஜபலம் போய்விடும், மனைவியிறந்தால் இவையெல்லாம் போய்விடும் எ-று.

ஓதுபொருள் கண்டோர்க் குறுமாசை நீதியிலாப்
பாதகரைக் கண்டோர்க்குப் பாவமாம் - சீதமலர்
கண்டோர்க் குறும்பசுங் கற்றமைந்த நற்றவரைக்
கண்டோர்க் குடனுங் கதி

(இ-ள்.) திரவியத்தைக் கண்டவர்களுக்கு ஆசையு ண்டாவதுபோலப் பாவிகளைக்கண்டவர்களுக்கு பாவ முண்டாகும் புஷ்பங்களைக் கண்டவர்களுக்கு விருப்ப முண்டாவதுபோல் மெய்ஞ்ஞானியைக் கண்டவர்க ளுக்கு மோட்சமுண்டாகும் எ-று. ௬௨

பாவிதனந் தண்டிப்போர் பாலாகு மல்லதருள்
மேவுசிவ னன்பர்பால் மேவாதே - யோவியமே
நாயின்பா லத்தனையு மாய்நலக்கா மன்றியே
தூயவருக் காகுமோ சொல்.

(இ-ள்.) பாவிகள் தேடும்பொருள் தண்டிப்பவர்களுக்கு உதவுமேயல்லாமல் சிவனடியார்களுக் குதவாது அதெப்படியெனில் நாயின்பால் நாய்க்குட்டிகளுத வுமேயன்றிச் சான்றோருக்குதவாது அதுபோல.

பொன்னுங் கரும்பும புகழ்பாலுஞ் சந்தனமும்
சின்னம் படவருத்தஞ் செய்தாலு - முன்னிருந்த
நற்குணமே தோன்று நலிந்தாலு முத்தமர்பால்
நற்குணமே தோன்று நயந்து.

(இ-ள்.) பொன்னைச் சுட்டாலும் கரும்பை ஆலையாடினாலும் பாலைக்காய்ச்சினாலும் சந்தனத்தைத் தேய்த்தாலும் அதனதன் குணங்கெடாது அதுபோல வறுமை முதலியவற்றால் நல்லோர்மனம் வருந்தினாலும் அவர்களது நற்குணங் கெடாது எ-று. ௬௪

வேசியரும் நாயும் விதிநூல் வயித்தியரும்
பூசாருங் கோழிகளும் பொன்னையிர் - பேசிலொரு
காரணந்தா னின்றியே கண்டவுடனே பகையாங்
காரணந்தா னப்பிறப்பே காண்.

(இ-ள்.) விலைமாதர்களை விலைமாதர்களும் நாய்களை நாய்களும் வயித்தியரை வயித்தியரும் பிராமணர்களை பிராமணர்களும் கோழிகளைக் கோழிகளும் கண்டால் யாதொரு காரணமுமில்லாமல்பகையுண்டாகும் யோசிக்குமிடத்துப் பிறப்பே காரணமாயிருக்கின்றது.

அன்னமனை யீர்க்குயிலுக் கானவழ கின்னிசையே
கன்னன்மொழி யார்க்கழகு கற்பமே - மன்னுகலை

கற்ளூர்க் கழகு கருணையே யாசைமயக்
கற்ளூர்க் கழகுபொறை யாம்,

(இ-ள்.) குயிலுக்கழகாவது இன்னோசை அது போல ஸ்திரீகளுக்கு அழகாவது கற்பு கற்றுணர்ந்த வர்களுக்கு அழகாவது பொறுமை எ-று. சுசு

இதமகித வார்த்தை யெவர்க்கேனு மேலா
மிதமெனவே கூற லிதமன்றே யிதமுரைத்த
வாக்கினு லேரண்ட மாமுனியுஞ் சோழனு
தேக்குநீர் வீழ்ந்தொழிந்தான் சேர்ந்து.

(இ-ள்,) இதம அகிதமாகியவார்த்தைகளை எவருக் காவது சொல்லுவது நன்மை எனக்கருதிச் சொல்ல லாகாது ஏனெனில் ஏரண்டமாமுனிவர் சோழராச னுக்கு இதமான வசனத்தைச்சொல்லி அந்த ராஜ னோடு தானுமிறந்தார்

முற்காலத்தில் ஒருநாள் காவிரியின் வெள்ளமானது திருவலஞ்சுழி என்னுந் தலத்துக்குச் சமீபத்தில்வ ரும்போது சுழித்துக்கொண்டு பூமிக்குள் போய்விட சோழராசன் அதைக்கண்டுதுயரமுற்று ஏரண்டமா முனிவரை வணங்கி இந்தச் சேதியைச்சொல்ல அந் தச்சுழியில் ஒரு முடித்தலையையாவது கடைத்தலை யையாவது கொடுத்தால பிரவாகம் உள்ளிரங்காமல் பெருகுமென்று அவர்சொல்ல அதைக்கேட்டரசன் தேசம் செழித்திருக்கவேண்டுமென்கிற கருணைவால் அந்தச் சுழியில விழுந்துவிட்டான் அதைப் பார்த்தி ருந்த முனிவர் நம்மாலல்லவோ அரசன் இறந்துவிட் டானென்று தாமும் அந்தச் சுழியில விழுந்து இறந் தார் எ-று. சுஎ

இந்தரையோர் தம்பி லிருவரே யேலாஞேர்
சித்திரச வாதி சிவயோகி - முத்தனையீர்

கல்குரவு முற்பலமு நாசம் புரிவாரே
யல்லவரே வீரியக்கீ டம்.

(இ-ள்) மானிடரில் ரசவாதியும் சிவயோகியுமே மேலானவர்கள் ஏனெனில் ரசவாதிக்குத் தரித்திரமி ல்லை சிவயோகிக்குப் பிறவியில்லை மற்றவர்களோவெ ன்றால் புழுக்களை ஒப்பாவார்கள் எ-று. சுஅ

அற்றசிவ யோகிக் கருஞ்சின்ன மூன்றுண்டு
பற்றலகை யுன்மத்தம் பாலரிறல்-முற்றுரச
வாதிக்குச் சின்ன மூன்றுண்டே மகிழ்போக
மீதலிர வாமை யென்று.

(இ-ள்) சிவயோகிக்கு மூன்றடையாளமுண்டு அ வையாவையெனில் அகப்பற்றுபுறப்பற்றின்றிப் பே ய்பிடித்ததுபோலவும் உன்மத்தம் மேலிட்டதுபோ லவும் பாலர்போலவும் இருத்தலாம் ரசவாதிக்கு மூ ன்றடையாளமுண்டு அவையாவையெனில் செல்வம னுபவித்தலும் இரப்பவர்களுக்குக் கொடுப்பதும்கா ன் ஒருவரிடத்திற்போய் இரவாமையுமாம் எ-று.

வல்லவர்பாற் கல்வி மதமாண வம்போக்கும்
அல்லவர் பாற்கல்வி யவைவிளைக்கு-நல்லிடத்தில்
யோகம் பயில்வா ருயர்ந்தோ ரிழந்தார்கள்
போகம் பயில்வார் புரிந்து.

(இ-ள்) வல்லவர்கள் கற்ற கல்வியானது செருக் கையும்அகங்காரத்தையும் நீக்கும், பேதைகள் கற்ற கல்வியானது செருக்கையும் அகங்காரத்தையும் உ ண்டாக்கும், மேலோர்கள் யோகத்தையே விரும்பு வார்கள் மூடர்கள் போகத்தையே விரும்புவார்கள் எ-று. எ0

தீயவர்பாற் கல்வி சிறந்தாலு மற்றவரைத்
தூயவரென றெண்ணியே துன்னற்க-சேயிழையே

நன்னொளிய மாணிக்கஞ் சர்ப்பந் தரித்தாலு
நண்ணுவரோ மற்றதனை நாடி.

(இ-ள்) தீயவர்களிடத்தில் கல்வி அதிகமாயிருந்தாலும் அவர்களை நல்லவர்களென்றெண்ணிச்சேராதே ஏனெனில் பாம்பினிடத்தில் மாணிக்கமிருந்தாலும் அதனிடத்தில் சேர்வார்களோ எ-று. எக

ஊரு ரெனும்வனத்தே யொள்வாட்கண் மாதரெனு
கூரூர் விடமுட் குழாமுண்டே சீரூர் [ங்
விரத்திவயி ராக்ய விவேகத் தொடுதோ
லுரத்தணியத் தையாவென் றோது.

(இ-ள்) ஊராகியவனத்திலே ஸ்திரீகளாகியமுள்ளுகளுண்டு, துறவிகள்வயிராக்கியந்தங்கிய விவேகமென்னும் பாதரட்சையை அறிவென்னுங் காலில்தரித்தால் அந்தமுள்ளுகள் தையாவாம் எ-று. எஉ

போற்று குருகிளையும் பொன்னாசை யோர்க்கில்லை
தோற்றுபசிக்கில்லை சுவைபாகந்-தேற்றுகவி
நேசற் கிலைசுகமு நித்திரையுங் காமுகர்தம்
ஆசைக் கிலைபயமா னம்.

(இ-ள்) பொன்னாசை யற்றவர்களுக்குக் குருவும் சுற்றத்தாருமில்லை மிக்கபசியுள்ளவர்களுக்கு ருசியும் பாகமுமில்லை கவிபாடும் இச்சை யுள்ளவர்களுக்குச் சுகமும் நித்திரையுமில்லை பெண்ணாசை யுள்ளவர்களுக்குப் பயமும் மானமுமில்லை எ-று. எங

நன்றறியாத் தீயோர்க் கிடங்கொடுத்த நல்லோர்க்குந்
துன்று கிளைக்குந் துயர்சேருங்-குன்றிடத்திற்
பின்னிலவில் வந்தகரும் பிள்ளைக் கிடங்கொடுத்த
அன்னமுதற் பட்டதுபோ லாம்.

(இ-ள்,) காகத்துக்கிடங்கொடுத்த அன்னப்படசிக்குத் துயரஞ் சம்பவித்ததுபோல துஷ்டருக்கு இடங்கொடுத்த நல்லோர்க்கும் அவர்கள் சுற்றத்தாருக்கும் துயரம் சம்பவிக்கும்.

ஒருவராலும் ஏறக்கூடாத பெரிய மலைக்குகையில் அன்னப்பட்சிகள் வாசஞ் செய்துக்கொண்டிருக்கையில் ஒருநாளிராத்திரி ஒரு காக்கையானது வந்து ஓ அரசவன்னமே நான் மழையிலகப்பட்டு திசைதப்பி வந்தேன் நீ இடங்கொடுத்து ஆதரிக்கவேண்டுமென்று சொல்ல அவ்வரசவன்னம் மந்திரியன்னத்தைப் பார்க்க அரசனே எந்தப்பட்சிக் கிடங்கொடுத்தாலும் காக்கைக்குமாத்திரம் இடங்கொடுக்க லாகாதென்று தடுக்க அவ்வரசவன்னஞ்சொல்லியது காக்கையினம் உதயகாலத்தி லெழுந்திருத்தலும் ஒருவருங் காணாமல் புணர்தலும் அந்தியில் குளித்துச் சேக்கையிற் சேர்தலும் இரையகப்பட்டால் சுற்றத்தோடுண்ணுதலும் உயிரோம்புதலுமாகிய ஐந்து குணங்களையுடையதாகையால் அதைக் காப்பாற்றுவதே தருமமென்று இடங்கொடுக்கக் காக்கை அன்றிராத்திரி யங்கிருக்கையில் எச்சமிட்டது அவ்வெச்சத்திலிருந்த ஆலம்வித்து முளைத்துப் பெரிய விருட்சமாக அவ்விழுதுகளைப் பற்றிக்கொண்டு ஒரு வேடன் மேலேறிக் கண்ணிவைத்து அன்னங்களையெல்லாம் பிடித்துக்கொண்டுபோனான் எ-று. எ௭

மனம்வேறு சொல்வேறு மன்னு தொழில்வேறு
வினைவேறு பட்டவர்பால் மேவும் - மனமே
மனமொன்று சொல்லொன்று வான்பொருளு மொன்
கனமொன்று மேவவர்தங் கண், [றே

(இ-ள்.) துர்ச்சனரிடத்து மனம் வாக்கு செய்கையாகிய இம்மூன்றும் வெவ்வேறாயிருக்கும் சற்சனரி

டத்து மனம்வாக்குசெய்கையாகிய இம்மூன்றும் ஒன்றுபோலவே யிருக்கும் எ-று. ௭௫

கண்ணுக் கினிய சபைக்குமணி கற்றோரே
விண்ணுக்கினியமணி வெய்யோனே-வண்ணநறுஞ்
சந்த முலையார் சயனத் தினியமணி
மைந்தன் மனைக்கு மணி.

(இ-ள்.) சபைக்கு ரத்தினங்கற்றவர்கள் ஆகாயத்துக்கு ரத்தினம் சூரியன் சயனத்துக்கு ரத்தினம் ஸ்திரிகள் மனைக்குரத்தினம் புத்திரர்கள்-எ-று. ௭௬

பாலினீர் தீயனுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து
மேலுநீர்கண்டமையு மேன்மைபோல்-நூல்நெறி
யுற்றோ ரிடுக்க ணுயிர்கொடுத்து மாற்றுவரே
மாற்றோர் புகல மதித்து.

(இ-ள்) பாலானது தன்னைச்சேர்ந்தநீரைத் தீயானது சுடச்செய்யக்கண்டு பொறுதுபொங்கித தீயைவித்துப் பின்னுமநீரினலடங்கும் அதுபோலப் பெரியோர்களும் தங்களை அடுத்தவர்களுக்குத்துன்பம்வந்தால தங்களுயிரையாவது கொடுத்துக் காப்பாற்றுவார் எ-று (௭௭)

அந்தோ பரமெரித்த வண்ணலடியார் பொருள்கள்
செந்தீயினுங் கொடிய தீகண்டாய்-செந்தீயு
னீங்கிற் சுடாதே நெடுந்தூரம் போனாலும்
எங்கச் சுடுமோ யிது

(இ-ள்) பரமசிவனுடைய அடியார்பொருள் தீயினுங் கொடியதாகும் ஏனெனில் தன்னைவிட்டு நீங்கினபேரைத தீயானதுசுடாது அந்தப்பொருளானது தன்னைக் கவர்ந்தவர்கள் எங்கேபோனாலும் சுடும். எ-று. ௭௮

நிந்தையிலாத் தூயவரும் நிந்தையரைச் சேரிலவர்
நிந்தையவா தம்மிடத்தே நிற்குமே-நிந்தைமிகு
தாலநிழற் கீழிருந்து தான்பா லருந்திடினும்
பாலதெனச் சொல்லுவரோ பார்

(இ-ள்) குற்றமற்ற மேலோர்களானாலும் குற்றமுள்ள கீழோரைச்சேர்ந்தால் குற்றமே சாரும் அதெப்படியெனில் பனைமரத்தின்கீழிருந்து பசும்பாலைக்குடித்தாலும் பாலென்று சொல்லார்கள் எ-று　　எ௬

கன்மமே பூரித்த காயத்தோர் தன்செவியில்
தன்மநூல் புக்காலுந் தக்காதே-சன்மமெனும்
புண்டு சமிக்குநா யுண்ணுவி நெய்யதனை
யுண்டு சமிக்குமோ வோது.

(இ-ள்.) பாவிகளுடைய செவியில் தருமசாஸ்திரத்தைப் போதித்தால் தக்காது அதெப்படியெனில் தோலையும் எலும்பையுந் தின்னும் நாய் பசுவின்நெய்யை யுண்ணாதது போல-எ-று.　　அ௦

பெண்ணுக்கவுங் காலை பிதாவிரும்பும் வித்தையே
யெண்ணிறனைவிருமபு மீன்றதாய்-நண்ணிடையிற்
கூரியநற்சுற்றங் குலவிரு ம்பும் காந்தனது
பேரழகு தான்விரும்பும பெண்.

(இ-ள்.) தகப்பன் தன்பெண்ணைக கல்விகற்றவனுக்குக்கொடுக்க விரும்புவான் தாய்திரவிய முள்ளவனுக்குக் கொடுக்க விரும்புவாள் சுற்றத்தார் நற்குலத்தை விரும்புவார்கள் பெண் அழகுள்ளவனையே விரும்புவாள்-எ-று.　　அ௧

காந்தனும் புன்லை கலந்து விரும்புமே
வேந்தர் தனமே விரும்புவார்-சாந்தநூல்
கல்லார் பகைசேர் கலசம் விரும்புவார்
நல்லார் விரும்புவார் நட்பு.

(இ-ள்) வண்டானது புன்னைமலரையே விரும்பும் வேந்தர்கள் பொருளையே விரும்புவார்கள் கல்லாத மூடர்கள் கலகத்தையேவிரும்புவார்கள் நல்லோர்கள் நட்பையே விருமபுவார்கள்-எ-று.　　அ௨

கற்றைக் குழலார் கவினெல்லா மோர்மகவைப்
பெற்றக் கணமே பிரியுமே-கற்றுணை
வேட்ட பெரியோர் பெருமையெல்லாம்வேறொன்றை
கேட்ட பொழுதே கெடும்.　　[க்

(இ-ள்) ஒருகுழந்தையைப் பெற்றவுடனே ஸ்திரீகளுடைய அழகெல்லாம் போய்விடும் அதுபோலத் திருவருளை விரும்பிய பெரியோர்கள மற்றொருவிடத்தை விரும்பினல் அத்திருவருள அவர்களை விட்டுப்போய்விடும்-எ-று. ௩௩

சீலங் குலமடியா ளண்டிற் கெடுங்கணிகை
யாலிங்கனந் தனநாச மாகும்-நூலிழந்த
வல்லிதழு வக்குறையும் வாழ்நாள் பிறர்தாரம்
புல்லினர்க் கெல்லா நலமும் போம்

(இ-ள்) அடியாளைப் புணர்ந்தால் ஒழுக்கமுங்குலமுங்கெடும் வேசியைப்புணர்ந்தால் திரவியநாசமாகும் கைம்பெண்ணைப்புணர்ந்தால் ஆயுள்குறையும் பிறர்மனைவியைப் புணர்ந்தால எல்லாதனமும் போய்விடும்-எ-று. ௩௪

சத்திய மேசாலுஞ் சனவிருத்த மாகுமே
யெத்தியபொய் யார்க்கு மிதமாகும்-சத்தியபால்
வீடுதோறுஞ் சென்று விலையாமது விருந்த
வீடுதனி லேவிலையா மே

(இ-ள்) ஜனங்களுக்கு சத்தியவசனமானது விரோதமாயிருக்கும் அசத்தியவசனமானது இதமாயிருக்கும் அது எப்படியெனில்பாலானது வீடுகள்தோறுஞ்சென்று விற்றால் விலையாகும் கள்ளானது யாவரும் தேடிவந்து வாங்கும்படி இருப்பிடத்திலேயே விலையாகும் அதுபோல-எ-று ௩௫

நல்லொழுக்க மில்லா ரிடஞ்சேர்ந்த நல்லோர்க்கு
நல்லொழுக்க மில்லாச்சொ லன்னுமே-சொல்லிவிடப்
பாம்பெனவுன் னுமோ பழுதையே யானாலும் [ப்
தாம்பமரும் புற்றடுத்தாற் சொல்.

(இ-ள்.) துர்ச்சனரை சேர்ந்த ர்ச்சனரையும் துர்ச்சனரென்றே நினைப்பார்கள், அதயெப்படி யெனில், பழுதையானது புற்றருகிருந்தால் பாம்பென்றே நினைக்கப்படும் அதுபோல-எ-று. ௩௬

வாய்க்குநயத் தாலன்றிக் கற்றவரை
யாக்கைநயத் தாலறிய லாகாதே—காக்கையொடு
நீலச் சிறுகுயிலை நீடிசையா லன்றியே
கோலத் தறிவரோ கூறு.

(இ-ள்.) கற்றுணர்ந்தவர்களையும் சிவயோகிகளையும் அவர்கள் வசனிக்கும் இனியவசனத்தால் அறியலாமேயன்றி உருவத்தாலறிய அதெப்படியெனில், காக்கையும் குயிலையும் ஓசையாலறியலாமேயன்றி யுருவத்தாலறியலாகாது அதுபோல எ-று. ௮௭

ஆசையெனும் பாசத்தா லாடவர்தஞ் சிந்தைதனை
வீசுமனை யாந்தறியில் வீழ்த்தியே - மாசுபுரி
மாயா மனைவியரா மக்கண் மகவென்னு
நாயாற சடிப்பித்த ஞடு

(இ-ள்) புருஷர்களுடைய மனதை ஆசையாகிய கயிற்றாற்கட்டி மனைவிமக்களாகிய நாயாற்கடிப்பித்தலை ஆராய்ந்துபார் எ-று. ௮௮

தானறிந் தோர்க்குதவி தன்னு லமையுமெனில்
தானுவந் நீகறலை யாமே - யானதனுல்
சொன்ஞர் புரிதவிடை சொல்லியுபபன் மறுனுத்
பின்னுட் புரிவதுவோ பின் [துப்

(இ-ள்) ஒருவன் குறிப்பறிந்துகொடுப்பது உத்தமம் கேட்டபின் கொடுப்பது மத்திமம். பலநாள் திரிய செய்து கொடுப்பது அதமம் எ-று. ௮௯

உற்றமறை யாத்தி லுய்க்குமவ னுத்தமனே
மற்றமறை பகர்வோரை மத்திமனே - முற்றிழையீர்
அத்தமுறை யாற்புகல் வானதமனென
வித்தகனு லோதும் விரித்து

(இ-ள்) யாதாவதொரு இரகசியத்தை வெளிவிடாமல் மறைக்கின்றவன் உத்தமன், யாரோடுஞ்சொல்லுகிறவன் மத்திமன் திரவியம் வாங்கிக்கொண்டு சொல்லுகிறவன் அதமம் எ-று. ௯௰

உத்தமர்தா மீயுமிடத் தோங்குபனை போல்வாரே
மத்திமர்தாந் தெங்குதனை மானுவரோ - முத்தலரு
மாங்கமுகு போல்வா ரதம ரவர்களே
தேங்கதலி யும்போல்வார் தேர்ந்து.

(இ-ள்) கொடுக்குந்தன்மையில் உத்தமர் பனைமரத்தக் கொப்பாவார் மத்திமர் தென்னை மாத்தக் கொப்பாவார் அதமர் கமுகு மரத்துக்கும் வாழைமரத்துக்கும் ஒப்பாவார் பனைமரம் நீரைவிரும்பாமலே பலனைத்தரும், தென்னமரம் நீர் விட்டமட்டிலே பலனைத்தரும், கமுகும் வாழையும் மாறாமல் நீர்விட்டுக் கொண்டிருந்தால் பலனைத்தரும் எ-று. ௬௬

வல்லோர் தமக்கு மினிதுதவ லன்றியே
நல்லோர் தமக்குதவி நாடாதே - வல்லதரு
காம நிதிமேக நயந்துதவ லன்றியே
தாமுதவி நாடுமோ சாற்று.

(இ-ள்.) நல்லவர்கள் மற்றெல்லாருக்கும் உதவிசெய்கிறதேயல்லாமல் அவர்களால் தங்களுக்கு ஒருதவியையும் வேண்டார்கள் அதெப்படியெனில் கற்பகத்தருசங்கநிதி பதுமநிதி மேகம் என்னும் இவைகள் பிறருக்கு உதவிசெய்யுமேயல்லாமல் அவர்களால் தங்களுக்கு உதவிவேண்டா அதுபோல எ-று.

வெய்யோன் கரண மிகச்சுடுமோ வெய்யவனில்
செய்யோன் கிரணமிகத் தீதாமே - வெய்யகதிர்
எல்லோன் கிரணத் தெரியினு மெண்ணமிலார்
சொல்லே மிகவுஞ் சுடும்.

(இ-ள்.) சூரியகிரண மிகவுஞ்சுடும் தீயானது அதனிலும் அதிகமாகச்சுடுமே மூடர்சொல் அவ்விரண்டிடினும் அதிமாகச்சுடும். ௬௮

திங்க ளயிர் கிரணமிக் சீதளமே
திங்களினுஞ் சந்தனமே சீதளமாம் - இங்கிவற்றின்
அன்பறிவ சாந்த மருளுடையார் நல்வசனம்
இன்பமிகுஞ் சீதளமா மே.

(இ-ள்) சந்திரகிரணம் மிகவும் குளிர்ச்சியாயிருக்கும் சந்தனமானது அதைப்பார்க்கிலுங் குளிர்ச்சியாயிருக்கும் நல்லவர்கள் வசனம் அவ்விரண்டைப் பார்க்கிலுங் குளிர்ச்சியாயிருக்கும் எ-று. ௩௪

சீராம் வெண்ணீற்றுத் திரிபுண்டரம்விடுத்தே
பேரான முத்தி பெறவிரும்பல் அமிர்த
சஞ்சீவியை விடுத்தே சாகா திருப்பதற்கு
நஞ்சே புசித்ததுபோ னடு.

(இ-ள்.) விபூதி தரித்துக்கொள்வதைவிட்டு மோட்சமபெற விரும்பல் (எப்படியெனில்) இறவாமலிருக்க விரும்பினவன் அமிர்தசஞ்சீவியைவிட்டு நஞ்சையுண்பதுபோலாம் எ-று ௩௫

செந்தாமரை யிரவி சேருதயம் பார்க்குமே
சந்திரோ தயம்பார்க்கு நன்குமுதம் கந்தமிகும்
பூவலரப் பார்க்கும் பொறிவண்ட ரன்பாவிடைத்
தேவன்வரல் பார்ப்பார் தெளிந்து.

(இ-ள்) தாமரையானது சூரியனுதித்தலை விரும்பும் அல்லியானது சந்திரனுதித்தலை விரும்பும் வண்டானது பூமலர்களை விரும்பும் அதுபோல அடியார்கள் பரமசிவன் தரிசனமாவதைவிரும்புவார்கள் எ-று.

வில்வமருதக் கொவ்வா மென்மலர ணுவ்வெனு, நல்லவன்பர் சொற்கொவ்வா நான்மறைகண் மெல்லால், ஆமந்திர மெவையு மைந்தெழுத்தை யொவ்வாவே, சோமசுந்தரற் கென்ற சொல்.

(இ-ள்) பரமசிவனுக்கு எல்லாவிதமலர்களும் வில்வத்தையும் அறுகையு மொப்பாகா நாலுவேதங்களும் திருஞானசம்மந்த சுவாமிகள், அப்பர் சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்க சுவாமிகள் என்னுமிந்த நால்வர் அருளிச்செய்த தேவாரந் திருவாசகங்கட்கொப்பாகா மந்திரங்களெல்லாம் ஸ்ரீபஞ்சாட்சரத்துக் கொப்பாகா எ-று. ௩௭

கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழ்கினுநல்
வல்லா னொருவனையே மானுவரோ - அல்லாரும்
எண்ணிலா வான்மீ னிலகிடினும் வானகத்து
வெண்ணிலா வாமோ விளம்பு

(இ-ள்.) கல்லாதவர்கள் பலராக இருப்பினும்கற்ற ஒருவனுக்கும் ஒப்பாகார்கள் அதெப்படியெனில் நட்சத்திரங்கள் பலவாயிருந்தாலும் சந்திரனுக் கொப்பாகா அதுபோல-எ-று. ௯௮

சந்தனத்தைச் சேர்தருவுந் தக்கமணங் கமழுஞ்
சந்தனத்தைச் சார்ந்தவேய் கழலபற்ற - அந்தவனந்
தானுமச்சந் தனமுந் தன்னினமு மாள்வதன்றித்
தானுங் கெடச்சுடுமே தான்.

(இ-ள்) சந்தனமரத்தைச்சார்ந்த மற்றமரங்களெல்லாம் சந்தனவாசனைகமழும் ஆனால் மூங்கில மாத்திரம் அந்தவனமும் அதிலுள்ள சந்தனமரங்கள் தன்னினமாகிய மூங்கில்கள் மற்றுந்தான் எல்லாம் வேகும்படிசுடும் அதுபோல நல்லவர்களைச் சேர்ந்தவர்களில் சிலர் அவர்களைப்போல நல்லவர்களாவார்கள் சிலர் அந்த நல்லவர்களையு மவர்களைச் சேர்ந்த மற்றவர்களையும் கெடுத்து தாங்களுங் கெடுவார்கள்-எ-று.

கங்கை நதிபாவஞ் சசிதாபங் கற்பகந்தான்
மங்கலுறும் வறுமை மாற்றுமே - துங்கமிகும்
இக்குணமோர் மூன்றும் பெரியோ ரிடஞ்சேரில்
அக்கணமே போமென் றறி.

(இ-ள்.) கங்கைநதி பாவத்தைப் போக்கும் சந்திரன் வெப்பத்தைப் போக்கும் கற்பகவிருட்சம் வறுமையைப்போக்கும் பெரியோர்கள் சார்பு இம்மூன்றையும் போக்கிவிடும்-எ-று. ௱

நீதிவெண்பா மூலமும்-உரையும் முற்றிற்று.

---